# இல்லற வாழ்க்கையும் ஒழுக்க நெறிகளும்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# இல்லற வாழ்க்கையும் ஒழுக்க நெறிகளும்


இயற்றியவர் :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. R. வரதராஜன், B.A., B.T.


சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு








தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1987 [ ரூ. 2-00

SIVANANDA CENTENARY PUBLICATION



* O *

Translation of

# "MARRIAGE, ETHICS & LIFE"

[ From 'BLISS DIVINE' ]

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of* :

SRI. O. M. S. S. S. S. SHANMUGANATHAN. B. A.,
VIRUDHUNAGAR - 626 001.

Printed at The Literary Press, Salem - 636 001.

# இல்லற வாழ்க்கையும் ஒழுக்க நெறிகளும்

## வாழ்க்கை

வாழ்க்கை என்பது இறைவன் தன்னை வெளியே காட்டிக் கொள்ளும் முறையாகும். வாழ்க்கை என்பது இன்பம்; வாழ்க்கை என்பது ஆன்மாவின் பேரின்ப வெள்ளமாகும்.

வாழ்க்கை என்பது உணர்வின் வெள்ளம். வாழ்க்கை ஒவ்வொரு அணுவிலும் செயல்படுகிறது. ஒவ்வொரு பொருளிலும் உயிர் இருக்கின்றது. உயிரில்லாத பொருள் என்பதே கிடையாது. ஒரு சிறு கல்லிலும் கூட உயிர் இருக்கிறது. ஒவ்வொரு பொருளும் உயிர்த்துடிப்போடு கூடியது. இதை நவீன கால அறிவியல் அறிஞர்கள் தெளிவாக நிரூபித்துள்ளார்கள்.

காலமாகிய முடிவில்லாத பெருங்கடலில் வாழ்க்கை என்பது ஒரு பயணம். அங்கே காட்சிகள் எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கின்றன. தூய்மையற்ற நிலையிலிருந்து தூய்மைக்கும், வெறுப்பிலிருந்து பரந்த அன்புக்கும், மரணத்திலிருந்து அமர நிலைக்கும், குறைவிலிருந்து நிறைவுக்கும், அடிமைத்தளையிலிருந்து விடுதலைக்கும், வேற்றுமையிலிருந்து ஒற்றுமைக்கும், அறியாமையிலிருந்து நிரந்தரமான அறிவுக்கும், துன்பத்திலிருந்து அழியாத பேரின்பத்துக்கும், வலிமையற்ற நிலையிலிருந்து அளவு கடந்த வலிமைக்கும் செல்லும் பயணமே வாழ்க்கை என்பதாகும். தன்னை வந்தடைவதற்கு நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்ள இறைவன் நமக்கு அளித்திருக்கும் ஒரு நல்வாய்ப்பு தான் வாழ்க்கை.

சேவையும் தியாகமும் தான் வாழ்க்கை. வாழ்க்கை என்பது அன்பு, அது ஒரு உறவு, வாழ்க்கை ஒரு கவிதை, உரைநடையல்ல. வாழ்க்கை என்பது கலை, கற்பனை, அறிவியல் அல்ல. வாழ்க்கை என்பது ஒரு வழிபாடு.

நாம் இவ்வுலகிலுள்ள பயணிகள். நாம் சேருமிடம் இறைவன். நாம் தேடுவது நாம் இழந்துவிட்ட நம்முடைய புராதன (பழைய) நிலை. வாழ்க்கையின் மையமான இலட்சியம் என்பது நாம் இறைவனோடு ஒன்றுபட்ட நிலையை உணர்ந்து தெளிவதுதான். வாழ்க்கை ஒரு தனிப் பட்ட நிலை என்று சொல்வதில் பொருள் இல்லை. பரமாத்மாவோடு ஜீவாத்மாவாகிய நாம் ஒன்று கலந்து, நிறைவு பெறும்போதுதான் அது பொருளுள்ளதாகிறது.

வாழ்க்கையின் இலட்சியம் :

நாம் எங்கிருந்து வந்தோமோ அங்கு மீண்டும் போய்ச் சேருவதுதான் வாழ்க்கையின் உண்மை யான இலட்சியம். ஆறுகள் தங்கள் ஆதாரமாகிய கடலைச் சென்று அடைவதற்காக நிற்காமல் ஓடிக் கொண்டிருப்பதைப் போலவும், நெருப்பு சுடர் விட்டு எரிந்து தான் தோன்றிய இடத்திலேயே மீண்டும் சென்று அடங்குவது போலவும், இறைவ னுடைய அருளால் அவனைச் சேர்ந்து அவனோடு ஒன்றுபடும் வரையில் நாம் அமைதியற்றிருப் போம்.

வாழ்க்கையின் உண்மையான நோக்கம் ஆன்மீக ஞானம் அல்லது முழு விடுதலை அடைவது ஒன்றுதான். தன்னிடமுள்ள இறையுணர்வை அறிந்து இறைவனை நோக்கிச் செல்வதே மனித வாழ்க்கையின் நோக்கமாகும். இறைவனிட

மிருந்து தான் வேறுபட்டதாக எண்ணும் நிலையை மாற்றி, இறைவனோடு ஒன்று கலந்துவிடுவதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். முடிவற்ற வாழ்க்கையை அடைவதுதான் முடிவுள்ள இந்த வாழ்க்கையின் மிகவுயர்ந்த குறிக்கோளாகும்.

உலகியல் வாழ்க்கையும், ஆன்மீக வாழ்க்கையும்:

ஆன்மீக வாழ்க்கைதான் உண்மையானதும், அழிவற்ற வாழ்க்கையுமாகும். ஆத்திரமும், அவசரமும் கொண்ட நவீனகால வாழ்க்கையானது பயமும், பாதுகாப்பற்ற நிலையும், நோயும், தடைகளும் நிறைந்து காணப்படுவதால் அது உண்மையான வாழ்க்கை அல்ல. உலகியல் பொருள்களால் ஏற்படும் ஆடம்பரமும், செல்வமும், பதவியும், வாழ்க்கையின் பயன்கள் அல்ல. அந்த மாதிரியான வாழ்க்கை மன அமைதியையும், ஆன்மீக அமைதியையும் கொடுக்காது.

உடலின்பத்தோடு கூடிய வாழ்க்கை பயனற்றது. புலனின்பத்தோடு கூடிய வாழ்க்கை, கொடிய விஷத்தோடு தேனைக் கலந்தது போன்றது. சிறிதளவு இன்பம் அளவுக்கதிகமான துன்பத்தோடு கலந்துள்ளது. புலனின்பம், பாவங்கள், துன்பங்கள், பற்றுகள், தீய பழக்கங்கள், மனஅமைதியில்லாமை ஆகிய பல குறைகளோடு கூடியது. புலனின்பத்தில் திளைத்திருப்பது தெய்வபக்தியை அழிப்பதோடு, சத்தியம் அல்லது உண்மையைப் பற்றி சிந்திப்பதையும் குறைக்கின்றது. புலனின்பம் வாழ்க்கை, ஒளி வலிமை, ஆண்மை, நினைவாற்றல், செல்வம், புகழ், புனிதத்தன்மை, பரம்பொருளிடம் பக்தி ஆகியவற்றை அழித்துவிடும். அது ஒரு மனிதனை நரகக்குழிக்கு இழுத்துச் செல்லும்.

உலகியல் வாழ்க்கை துயரங்களும், துன்பங்களும், பந்தங்களும் நிறைந்தது. அதில் குறைகளும், பலவீனங்களும், வரையறையும் உள்ளது. அதில் கவலைகள், ஏக்கங்கள், பொறாமை, வெறுப்பு, நோய்கள், மரணம், அற்பத்தனம், குறுகிய மனப்பான்மை, வஞ்சகம், இரட்டைவேடம், வஞ்சகப் போட்டி, தூய்மையற்ற இயல்புகள், அறியாமை, சண்டை சச்சரவுகள், போர், ஏமாற்றம், மனத் தளர்ச்சி, அமைதியின்மை, கொடுமை, ஏமாற்று வித்தை, கொந்தளிப்பு ஆகியவை நிறைய இருக்கின்றன. கற்பனையான இன்பப்பூச்சு அதன் மேலே இருக்கும். மெல்லியதாகத் தங்கமுலாம் பூசப் பட்டது போன்றிருக்கும். எல்லாம் பளபளப்பான தகட்டைப்போலவும், நிழல்போன்றும் இருப்பவை இனிப்பு தடவிய கசப்பு மாத்திரை போன்றவை. தங்கமுலாம் பூசப்பெற்ற பித்தளைபோல், வெளியே காணப்படும் இன்பத்துக்குப் பின்னால் துன்பம், துயரம், நோய் ஆகியவை இருக்கின்றன. இந்த உலக வாழ்க்கை அச்சங்களும், பணிவுகளும், துன்பங்களும் நிறைந்தது.

பொருளியில் வாழ்க்கை பொய்யானது; மாயமானது; விரைவில் மறையக்கூடியது; அற்பமானது; பயனற்றது. அதன் முடிவு தூசுக்குச் சமமானது. அதில் வானளாவிய பேச்சும், வம்பும், உண்பதும், உறங்குவதும் தவிர வேறு ஒன்றில்லை. எல்லாம் மாயை, எல்லாம் துன்பம். உலகியல் அனுபவம் மதிப்பற்றது, பொய்யானது. இறைவன் ஒருவர் தான் உண்மையானவர்.

பூஜ்யங்கள் எவ்வளவு எழுதினாலும் அவைகளுக்கு எந்த மதிப்புமில்லை. அவைகளுக்கு முன்னே '1' (ஒன்று) என்ற எண்ணை எழுதினால்தான் அவைகள் மதிப்புடையவையாகும். உலகத்

திலுள்ள சொத்துக்கள் எல்லாம் உனக்குச் சொந்த மாக இருந்தாலும், நீ ஆன்மீக வாழ்க்கையை மேற்கொள்ளாவிட்டால் ஆன்மீகச் செல்வம் அல்லது ஆன்மீக ஞானம் இல்லையானால் — அவை களால் எவ்விதப் பயனுமில்லை. நீ உன் வாழ்க்கை யோடு ஆன்மாவையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இதற்காகத்தான் இயேசு பெருமான் கீழ்க்கண்டவாறு கூறுகிறார். ''இறைவனுடைய சாம்ராஜ்யத்தையும் அவனுடைய உண்மையான நெறியையும் தேடி அடைவாயாக. அதன் பின்னர் மற்ற பொருள்களெல்லாம் தாமே உன்னைத் தேடி வந்தடையும்''.

பரம்பொருளோடு கூடிய வாழ்வுதான் வளம் மிக்க வாழ்வு. அதுதான் செழிப்புள்ள ஆன்மீக வாழ்வு. அந்த வாழ்க்கையில் துயரமும், துன்பமு மில்லை. அது முழுமையானது, குறைவற்றது, தானே இயங்கக்கூடியது. ஞானமும், அழியாத பேரின்பமும் நிறைந்தது. அது எங்கும் நிறைந்தது, எப்போதும் மாறாதது. அதில்தான் துஷ்டியும் (மன அமைதி) புஷ்டியும் (சத்தும்) நிறைந்து இருக்கின்றன.

ஆன்மீக வாழ்வையே சார்ந்து நில். அதனால் தூய்மையும், விடுதலையும் பெறுவாய். சத்தியத்தின் பீடத்தில் ஒருவருடைய முக்கியமான பற்றைத் தியாகம் செய்வதுதான் வாழ்க்கையில் மிகவும் சிறந்த செயலாகும். சத்தியத்தை நோக்கிப் பாடு படுவதும், எதிர்ப்படும் இடையூறுகளை உறுதியுடன் எதிர்த்து வெற்றி கொள்வதும்தான் வாழ்க்கை என் பதன் பொருள். இறைவனிடத்தில் பக்தி செலுத்து வதும், உன் உள்ளத்தில் இறைவனைப் பற்றித்

தியானம் செய்வதும்தான் வாழ்க்கையில் மிக உயர்ந்த இன்பமாகும். ஆன்மீக வாழ்க்கை மனித வாழ்க்கையைப் பொருளுடையதாகச் செய்து, புகழைத் தருகின்றது.

வாழ்க்கை ஒரு போராட்டம் :

இலட்சியத்துக்காகப் போராடுவதுதான் வாழ்க்கை. வாழ்க்கை என்பது முழுமையையும் குறைவற்ற தன்மையையும் அடைவதற்குரிய போராட்டமாகும். மிகவுயர்ந்த விடுதலையை அடைவதற்கான போராட்டம்தான் வாழ்க்கை. அது ஒரு வெற்றித் தொடரைக் குறிக்கின்றது. மனிதன் பரிணும வளர்ச்சியையும், மாறுதலையும் மற்ற வளர்ச்சிகளையும் பலவகைப்பட்ட அனுபவங்களையும், போராட்டத்தின் மூலம் பெறுகிறுன். வாழ்க்கையும் சமுதாயமும் போராட்டமின்றி நிலைத்திருக்க முடியாது. நீ தொடர்ந்து நிலைத்திருக்க வேண்டுமாஞல் போராட்டம் தவிர்க்கமுடியாதது. போராட்டத்தை நிறுத்திய மறுகணம் நீயும் வாழ முடியாது.

உள்ளமாகிய போர்க்களத்தில் உனக்குள்ளேயே இருக்கும் பகைவர்களுடன் வீரத்துடன் போராடு. உன் மனம், புலன்கள் ஆகியவற்றுக்கு எதிராக நீ பெறும் சிறிதளவு வெற்றிகூட, உனக்கு உள்ள ஆற்றலும், உறுதியும், வீரமும் அளிக்கும். போராட்டம் கடுமையாக இருந்தால் போற்றத் தக்கதாக இருக்கும். ஆன்மீகத் தெளிவுபெற மிகவும் கடுமையான போராட்டம் தேவை.

இறைவனுக்காகவே வாழ். அற்பமான, உலகியல் வாழ்க்கையில் நீ சந்திக்க நேரிடும் இடையூறு களையும் துன்பங்களையும் உறுதியுடன் எதிர்த்து நில். நீ ஒரு மனிதனாக இரு. மிகவுயர்ந்த பேறு பெறுவதற்காக உறுதியுடன் போராடு. மலை யேறுதலும், கால்வாயைத் தாண்டுதலும், ஒரு நகரத்தின் மீது குண்டெறிதலும், கோட்டையைத் தகர்த்தலும் உண்மையான வீரச்செயல்கள் அல்ல. மனதையும் புலன்களையும் அடக்குவதும், கோபம், ஆசை, அகந்தை ஆகியவற்றை வென்று தன்னையே வெற்றிகொள்வதும்தான் மனிதனுடைய உண்மை யான வீரத்தன்மையைக் குறிக்கும். ஆசைக்கும் புலன்களுக்கும் எவ்வளவு காலம் அடிமையாக இருக்கப் போகிறாய்? உன்னுடைய உண்மையான தெய்வீக இயல்பை வலியுறுத்திக்கொள். உன்னுடைய தாழ்ந்த இயல்புகளின்மேல் உன் வெற்றியை வலியுறுத்திக்கொள். இதுதான் உன்னுடைய மிகவும் இன்றியமையாத கடமை யாகும்.

வாழ்க்கை என்பது ஒரு பள்ளிக்கூடம்:

மேற்சொன்ன அறிவுரைக்காக, இந்த பூதவுடலால் செய்யவேண்டிய செயல்களைப் புறக் கணித்து விடக்கூடாது. பூதவுடலும், கண்ணுக்குத் தோற்றமாயுள்ள பொருள்களும் இறைவனுடைய திருவிளையாடலை வெளிப்படையாய் காட்டு வதற்காக ஏற்பட்டவை. பரம்பொருளும் சூக்ஷ்ம மான ஆன்மாவும் வெப்பத்தையும், நெருப்பையும் போலவும், குளிரையும் பனிக்கட்டியைப் போலவும், மலரையும் மணத்தையும் போலவும் பிரிக்க முடியாதவை. அவ்வாறே பிரம்மனும் மாயையும் பிரிக்க முடியாதவை. இரண்டும் ஒன்றேதான். பிரம்மத்தை அடைந்து நிரந்தர

மான அழிவில்லாத நிலையைப் பெறுவதற்கு நம்மைத் தயார் செய்து கொள்வதே இந்த வாழ்க்கையின் நோக்கமாகும். உபயோகமான அநேக பாடங்களை கற்றுக் கொள்ளவும். நமது குணநலத்தையும் தெய்வீகப் பண்புகளையும் வளர்த்துக் கொள்ளவும் உதவும் பள்ளிதான் இந்தவாழ்க்கை. இங்கே நமக்கு ஏற்படும் ஒவ்வொரு துயரமும், ஒவ்வொரு வருத்தமும், ஒவ்வொரு உள்ளத் தளர்ச்சியும் மிகவும் அரியதொரு பாடத்தைக் கற்றுக்கொடுக்கும் பள்ளிதான் இந்த வாழ்க்கை. நாம் முழுத்தகுதி அல்லது முழுமை பெற உதவுவதுதான் இந்தப் பூவுலக வாழ்க்கை.

'இந்த உலகம் உனது சிறந்த ஆசிரியர்'. இந்த உலகம் உனக்குச் சிறந்த குருவாக அமையும். ஒவ்வொரு பொருளிலும் நீ கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் ஒன்றுள்ளது. ஒவ்வொரு அனுபவத்திலும் நீ கற்றுக்கொள்ள ஒரு பாடம் இருக்கின்றது. கருணை, மன்னிக்கும்தன்மை, சகிப்புத்தன்மை, பரந்த அன்பு, தயை, பெருந்தன்மை, நெஞ்சுறுதி, பொறுமை உறுதியான உள்ளம் ஆகிய தெய்வீகப் பண்புகளை வளர்த்துக் கொள்ளப் பயில்வதற்கு ஏற்ற இடம் இந்த உலகம்தான். அரக்கத்தனமான கொடிய இயல்போடு போராடி, உனக்குள்ளே இருக்கும் தெய்வீகத்தன்மையை வெளிப்படுத்துவ தற்குரிய இடம் இந்த உலகம் தான். உலகத்தில் இருந்து கொண்டே ஆன்மீகத் தெளிவு பெற வேண்டும் என்பது பகவத் கீதை, யோகவாசிஷ்டம் ஆகிய வைகளில் உள்ள மையக்கருத்தாகும். உலகத்தில் இரு. ஆனால் உலகத்திலிருந்து பிரிந்திரு. தாமரை இலைத்தண்ணீரைப்போல் இரு. தன்னலம், காமம், கோபம், பேராசை, வெறுப்பு, பொறாமை போன்ற தீய இயல்புகளாகிய அசுரத்தன்மைகளை விட்டுவிடு.

தெய்வீக இயல்பை வலியுறுத்து. பற்றற்ற தன்மையும் தியாகமும் நிறைந்த வாழ்க்கையையும் மேற்கொள்.

வாழ்க்கையிலும் இறைவனை உணர்வதிலும் வெற்றி பெறுவதற்கான நிச்சயமான வழிகள்:

எளியதும், ஆடம்பரமில்லாததுமான வாழ்க்கையை நடத்து. உண்பதற்காக உயிர் வாழாதே; உயிர் வாழ்வதற்காக உண். யாரிடமும் பொறாமை கொள்ளாதே. யாரையும் தூற்றாதே. பொய் சொல்லாதே. யாரையும் வஞ்சிக்காதே. யாரிடமும் பகை வேண்டாம். இவ்வாறிருந்தால், மகிழ்ச்சியுடனும், இன்பத்துடனும், அமைதியுடனும் இருப்பாய். நேர்மையான நடத்தைதான் வாழ்க்கையின் நியதி. அறத்தோடு வாழ்க்கையை நடத்து. தர்மத்தை வழுவாது அனுஷ்டிக்க வேண்டும். நற்பண்புகளற்ற வாழ்க்கை மனித வாழ்க்கையே அல்ல.

வாழ்க்கைக்குச் சுவையூட்டுவது தன்னலங் கருதா சேவை. அனைவரிடத்தும் அன்பு காட்டுவது வாழ்க்கைக்கு உணவைப் போன்றது. மக்கட்குலம் முழுவதற்கும் சேவை செய்து அன்பு காட்டாவிட்டால் வாழ்க்கையை நன்கு உணர்ந்து, செவ்வனே நடத்தியதாக கருதமுடியாது. இறைவனிடத்து அன்பு செலுத்துவதும், மக்களுக்குச் சேவை செய்வதும் உண்மையான வாழ்க்கையின் இரகசியமாகும். மற்றவர்களுக்கு உதவி செய்வதற்காகவே வாழ். உயிரூட்டும் ஆற்றலைப்போல் தெய்வீக ஆற்றல் உனக்குள்ளே பாயும்.

ஞானியரின் வாழ்க்கை வரலாறுகளைப்படித்து அவற்றிலிருந்து உணர்வையும் உற்சாகத்தையும்

பெறு. உருகும் உள்ளத்தையும், கொடுக்கும் கரத்தையும், கனிவான பேச்சையும், தியாக வாழ்க்கையையும், சம நோக்கையும், ஒருதலைப் பட்சமில்லாத நடத்தையையும் வளர்த்துக்கொள். அப்போது வாழ்க்கை உண்மையில் பெரும் பேறுபெற்றதாகும்.

சேவை செய்; அன்பு காட்டு; கொடு; தூய்மைப் படுத்திக் கொள்; தியானம் செய். உன் வாழ்க்கைப் பயணம் உன்னை எல்லையற்ற இன்பம் நிறைந்த உலகுக்கு அழைத்துச் செல்லும். சுடர்விடும் செல்வங்களை அங்கு காண்பாய். மீண்டும் இறைவனைக் காண்பாய். உடலுறுதியுடனும், உடல் நலத்துடனும், உரிமையுடனும், இனிமையான நடத்தையுடனும், இன்பமுடனும், அமைதியுடனும் இருப்பாய். உணர்வுகளைப் பெற்று, உன்னோடு தொடர்புள்ள மற்றவர்களையும் இன்பம் பெறச் செய்வாய்.

வாழ்க்கையை முடிவற்ற இன்பமுள்ளதாகச் செய். சத்தியத்திலிருந்து இன்பத்தைப் பெறு. தவத்திலிருந்தும், தயை அல்லது கருணை, தானம் அல்லது கொடை மூலமாகவும் இன்பத்தை அடை.

எளிய முறையில் உன் வாழ்க்கை இருக்கட்டும். ஒழுங்கான வாழ்க்கையை மேற்கொள். ஒவ்வொரு நாளையும் உன் வாழ்வின் இறுதி நாளாக எண்ணிக் கொண்டு, ஒவ்வொரு கணத்தையும் பிரார்த்தனைக்கும், தியானத்துக்கும், சேவைக்கும் செலவிடு. உன் வாழ்க்கை இறைவனுக்காகச் செய்யும் இடைவிடாத தியாகமாகவே இருக்கட்டும்.

நிகழ்காலத்தில் வாழ்ந்திரு. கடந்த காலத்தை மறந்துவிடு. எதிர்காலத்தின் எதிர்பார்ப்புகளைக் கைவிடு.

வாழ்க்கையின் பொருளை நன்குணர்ந்து, உன் ஆராய்ச்சியைத் தொடங்கு. வாழ்க்கை என்பது உனக்குக் கிடைத்த அரிய பரிசு ஆகும். ஒவ்வொரு கண நேரத்தையும் பயனுடையதாகச் செலவிடு. துணிந்து செயல்படுபவர்களுக்குத்தான் பெரும் பாலும் வெற்றி கிட்டுகிறது. கோழைகளுக்கு அது ஒருபோதும் கிட்டுவதில்லை.

வாழ்வில் ஒருமைப்பாடு :

உயிர்கள் அனைத்தையும் ஒன்றாகவே பார். உயிர்கள் அனைத்தையும் ஒன்று சேரப் பார். உயிர்கள் எல்லாம் ஒன்று. எல்லா உயிர்களும் பிரபஞ்சத்தில் ஒரே உண்மையான பிரம்மம் அல்லது பரம்பொருளிலிருந்துதான் தோன்றி யுள்ளன. இறைவன் அனைத்து உயிர்களின் உயிர் மூச்சாக இயங்குகிறான். எல்லா உயிர்களும் மக்கட் குலமாகிய குடும்பத்தின் உறுப்புக்கள். உலகம் என்பது ஒரே வீடு. படைப்பெல்லாம் ஒன்றே. எந்த மனிதனும் அதிலிருந்து தனிப்பட்டவன் அல்ல. மற்றவர்களிடமிருந்து தனியே பிரிந்து வாழ்வதால், மனிதன் தனக்கே துன்பத்தை தேடிக் கொள்கிறான்.

தனித்திருப்பது அழிவைக் கொடுக்கும் :

ஒற்றுமைதான் அழியாத வாழ்வு. பரந்த அன்பை வளர்த்துக்கொள். எல்லோருடனும் இணக்கமாக இரு. எல்லோரையும் தழுவிச் செல். மற்றவர்களுடைய தகுதிகளையும் அறிந்து கொள். மனிதனிடமிருந்து மனிதனைப் பிரிக்கும் தடைகளை உடைத்தெறி. எல்லா உயிர்களிடமுள்ள பேதமற்ற கொள்கையையும், அழிவில்லாத சத்வ நிலையையும் உணர்ந்துகொள். மிருகங்களைக் காப்பாற்று. எல்லா உயிர்களையும் புனிதமானவை யாகக் கருது. அப்போது இந்த உலகம் அழகும்

அமைதியும்; எந்தவித சந்தடியுமில்லாத விண்ணுலகம் போன்றிருக்கும்.

மலரோடும், பசும் புல்லோடும் மகிழ்ச்சியுடன் இரு. வண்ணத்துப்பூச்சியுடனும், பறவைகளுடனும், மான்களுடனும் மகிழ்ந்து திரிந்து வா. புதர்கள், செடிகள், மரக் கிளைகள் ஆகியவைகளுடன் கை குலுக்கு. வானவில், காற்று, விண்மீன்கள், சூரியன் ஆகியவைகளுடன் பேசு. ஓடிக்கொண்டிருக்கும் சிற்றாறுகள், கடலலைகள் ஆகியவற்றுடன் உரையாடு. கைத்தடியுடன் பேசு. உன் அருகில் வசிப்பவர்கள், நாய்கள், பூனைகள், பசுக்கள், மனித இனம், மரங்கள், மலர்கள் ஆகியவர்களுடன் நட்புடன் இரு. அப்போது பரந்த, குற்றமற்ற, வளமான முழுமையான வாழ்வு உனக்குக் கிடைக்கும். உயிர்களின் ஒன்றுபட்ட தன்மையை நீ உணர்வாய். இதை சொற்களால் விளக்கிச் சொல்ல முடியாது. இதை நீயாகவே உணரத்தான் முடியும்.

---

## திருமணம்

திருமணம் என்பது வாழ்க்கையின் இரண்டாவது ஆசிரமம். அது நிலையான இல்லறத்தில் நுழைவதாகும். இல்லறவாசியின் வாழ்க்கையின் தொடக்கமாகும். மனிதனுக்குரிய கடமைகளைச் செய்து, தியாகம், கல்வி, தன் வம்சத்தை மக்கட் செல்வத்தின் மூலம் பெருக்குதல் ஆகிய பணிகளை மேற்கொள்ளுகிறான். ''வளமான எதிர்காலத்தைப் பெற உன் கைகளைப் பிடிக்கிறேன். நம் குடும்பம் தழைக்கவும், உன் கணவனாகிய என்னோடு நீ மூப்படையும் வரை வாழ்வதற்காகவும், உன் கைகளைப் பிடிக்கிறேன். பார்க்கவன், அரியமான், சவித்ரு, புரந்தி என்ற பெயர்களால் குறிக்கப்படும் ஒரே தேவன் இல்லறவாசியின் கடமைகளைச் செய்வதற்காக உன்னை எனக்கு அளித்திருக்கிறான். நல்ல வீரர்களாகிய மக்களைப் பெறுவதாலும், இறைவனை வணங்கிப் போற்றுவதாலும், இன்பத்தைத் தருவாயாக'', என்று மணமகன் மணமகளை நோக்கிக் கூறுகிறான்.

சந்ததியை விருத்தி செய்யத் தொடங்கும் முதல் காரியமான 'கர்ப்பதானம்' எனப்படும் சடங்கின்போது, ஒரு குழந்தை உற்பத்தி ஆகவேண்டுமென்று கணவன் உளமாற வேண்டிக் கொள்கிறான். ருது சாந்தி முகூர்த்தத்தின்போது புனிதமான மந்திரங்களை உச்சரிக்கிறான். மந்திர உச்சரிப்பால் உண்டாகும் அலைகளின் இடையே கருத்தரிக்கிறது. நல்ல எண்ணங்கள் கருவின் மூளை அணுக்களில் பதிகின்றன. தூய அறிவும் சரியான உணர்வும் உள்ள இந்து ஒருவன் இனச் சேர்க்கையை வெறும் இன்பத்தைத் தருவதாக மட்டும் கருதுவதில்லை. தெய்வீகத் தன்மையுள்ள தன் வீரியம் அல்லது ஆண்மையை ஒரு மனித உடலை உண்டாக்குவதற்குப் பயன்படுத்துகிறான்.

மனைவி என்பவள் அவன் வாழ்க்கைத்துணை. அவள் அவனுடைய 'அர்த்தாங்கி.' அவளில்லாமல் அவனால் மத சம்பந்தமான எந்தச் சடங்கையும் செய்ய முடியாது. மதச் சடங்குகளைச் செய்யும் அவள் அவனுடைய இடது பக்கமாக நிற்கிறாள். கணவனும் மனைவியும் இராமனையும் சீதையையும் தங்கள் இலட்சியமாக வைத்துக்கொள்கிறார்கள்.

ஒருவனுடைய மனைவி அவனுக்கு எவ்வாறு உதவ வேண்டுமென்பதற்கு, இராமாயணத்தில் இராமன் சீதையைப் பற்றிக் கூறும் கருத்துக்கள் அடங்கிய செய்யுள் விளக்கமாக அமையும். "ஆலோசனை கூறுவதில் அமைச்சராகவும், செயல் புரிவதில் பணிப் பெண்ணாகவும், மதச் சடங்குகளில் என் துணைவியாகவும், பொறுமையில் பூமியைப் போன்றும், பாசத்தில் அன்னையைப் போன்றும், படுக்கையில் தேவலோகத்து ரம்பையைப் போன்றும், விளையாட்டில் தோழியாகவும் என் மனைவி விளங்குகிறாள்" என்று இராமன் இலட்சுமணனிடம் கூறுகிறான். இதுதான் உண்மையான ஒரு இந்து மனைவிக்கு இருக்கவேண்டிய இயல்பு.

வாழ்க்கையின் நான்கு நிலைகளிலும், இல்லறம் தான் மிகவும் சிறந்தது. ஏனென்றால் அதுதான் மற்ற நிலையில் உள்ளவர்களுக்கு உதவுகிறது. உயிர்கள் அனைத்தும் காற்றின் உதவியால் வாழ்வதைப்போல், வாழ்க்கையின் மற்ற நிலையில் உள்ளவர்கள் இல்லறத்தில் உள்ளவர்களின் ஆதரவில் வாழ்கிறார்கள். ஆறுகளும் ஓடைகளும் கடலில் அமைதி பெறுவதற்காக நாடி ஓடுவதே போல், மற்ற மூன்று ஆசிரமத்தினரும் இல்லறத்தாளின் ஆதரவை நாடிச் செல்கின்றனர். எல்லாம் அவனைப்பொறுத்தே இருக்கின்றன.

இல்லறவாசியின் கடமைகள் :

இல்லறவாசி ஒருவன் ஒரு இலட்சிய புருஷனாக வாழவேண்டும். அவன் இந்துமத நூல்களில் விதிக்கப்பட்டுள்ள ஐந்து விதமான வேள்விகளைத் தவறாமல் செய்யவேண்டும். தன்னடக்கம், கருணை, பொறுமை, அகிம்சை, உண்மை, எதிலும் அளவோடிருத்தல் முதலிய பண்புகளை அவன் பயில வேண்டும்.

இல்லறவாசி அறவழிகளில் பொருளைத் தேடி, அதைச் சரியான வழியில் செலவழிக்க வேண்டும். வருவாயில் பத்தில் ஒரு பங்கை அறம் செய்வதில் செலவிட வேண்டும். நீதி நூல்களில் கூறப் பட்டுள்ள எல்லைக்குட்பட்டுப் புலனின்பத்தை அனுபவிக்க வேண்டும்.

இல்லறத்தவர்களுக்குத் தம் மக்களைச் சரியான முறையில் வளர்ப்பதில் பெரிய பொறுப்பு இருக் கின்றது. அவ்வாறு செய்ய வேண்டிய கடமையைப் புறக்கணிப்பவர்கள், தங்கள் உடலின்ப வேட்கை யைக் கட்டுப்படுத்தி, நைஷ்டிக பிரம்மச்சாரிகளாய் இருந்திருக்க வேண்டும். இவ்வுலகில் தம் மக்க ளுக்குச் சரியான முறையில் பயிற்சி அளிக்காதவர் களுக்கு மறு உலகில் கடும் தண்டனை காத்திருக் கிறது. அவர்கள் இலட்சிய வாழ்வு வாழ்ந்து மற்ற வர்களுக்கு வழி காட்ட வேண்டும். அவர்கள் தீய பழக்கங்கள் உள்ளவர்களானால், அவர்கள் மக்களும் அந்தத் தீய பழக்கங்களை மேற்கொள்வார்கள். குழந்தைகள் மற்றவர்கள் செய்வதையே செய்வார்கள்.

இல்லறவாசியின் மக்கள் அவனுடைய கடமை களைச் செய்வதில் பங்கேற்கத் தொடங்கியவுடனும்,

அவனுடைய பேரக் குழந்தைகள் அவனைச் சூழ்ந்திருக்கும் போதும், அவன் இவ்வுலக வாழ்க்கையிலிருந்து ஒய்வு பெற்று, எஞ்சிய வாழ் நாட்களைப் படிப்பிலும், தியானத்திலும் செலவிட வேண்டிய காலம் வந்துவிட்டது என்பதைக் குறிக்கின்றது.

உடலின்பமும் விவாகரத்தும் :

மேலை நாடுகளில் குழந்தைகள் மருத்துவமனைகளிலும், மகப்பேறு இல்லங்களிலும் பிறந்து வளர்கின்றன. அவைகள் உடல் நலம் தருவதும், பாசம், அன்பு, உள்ளத்தைத் தூண்டுவதுமாகிய தாய்மார்களின் உடலைத் தீண்டும் இன்பத்தைப் பெறுவதில்லை. அன்புள்ள தாயின் வெப்பமான அரவணைப்பில் உறங்குவது என்றால் என்ன என்பதே அவைகளுக்குத் தெரியாது. பேரம் பேசுவதும், பொருளாதாரத்தையே சிந்திப்பதுமாகிய சூழ்நிலையில் வளரும், அந்தக் குழந்தைகள் வாலிப வயதிலேயே காசுக்கும், பணத்துக்கும் நீங்காத பக்தி செலுத்தி, பிற்காலத்தில் வாழ்நாள் முழுவதும் காசேதான் கடவுள் என்று வழிபாடு செய்பவர்களாகி விடுகிறார்கள்.

மேலை நாடுகளின் சமுதாயச் சூழ்நிலையில் பாலுணர்வு மிகுந்து காணப்படுகிறது. இளம் பருவத் திருமணங்கள் அங்கு இல்லாமலிருந்தாலும், பாலுணர்வோடு கூடிய தொடர்பு இருக்கின்றது. திருமணமாவதற்கு முன்னரே ஆண் பெண் ஆகிய இருபாலாரும் உரிமையோடு பழகுவதற்கு மேலை நாட்டு அறிஞர்கள் அனுமதிக்கிறார்கள். அதை மேற்கொள்ள ஆலோசனையும் கூறுகிறார்கள். மேலை நாடுகளில் இது சாதாரணமாகக் காணப்படுகின்றது. பெற்றோர்களின் தொடர்பு

சட்டப்படி அனுமதிக்கப்படுவதற்கு முன்னரே, அநேக குழந்தைகள் கருவில் வளரத் தொடங்குகின்றன. இருபாலாரும் திருமணத்திற்கு முன்னரே ஒருவரையொருவர் சோதனை செய்து பார்க்கின்றனர். ''ஒரு காசே மதிப்புள்ள ஒரு பொருளைக் கூட யாரும் சோதனை செய்யாமல் வாங்குவதில்லை'' என்பது ஒரு ஜெர்மானியப் பழமொழி. இந்த மாதிரி சோதனைகளால் அபாயகரமான விளைவுகள் உண்டாகின்றன இந்த மாதிரியான மக்களிடையே உண்மையான அன்பு ஏற்படுவதில்லை. திருமணம் தனது புனிதத்தன்மையை இழந்து, ஒரு வியாபார உடன்படிக்கை போன்றதாகின்றது. இவைகள் எண்ணற்ற விவாகரத்துகளில் முடிகின்றன.

இந்திய நாட்டிலும் பெண்கள் இப்போது விவாகரத்து பெறும் உரிமையை அடைந்துள்ளனர். இது வெட்கப்படவேண்டிய விஷயம். நம் பெண் மணிகளும் மேல்நாட்டுப் பெண்களின் வழியைப் பின்பற்றுகின்றார்கள். இது மேலைநாட்டுப் பழக்கங்களைப் பின்பற்றும், நாகரீகமுள்ள சில பெண்களின் வேலை. ஆரியவர்த்தமாகிய இந்த நாட்டில் புனிதமான பாரத வர்ஷத்தில், சீதையும், ராதையும், தமயந்தியும், சாவித்திரியும் கற்பும் அறமும் நிறைந்த இலட்சிய வாழ்க்கை நடத்திய இந்த நாட்டில் ஆடம்பரம், அறிவற்ற தன்மையும், கல்வி கற்றோமென்ற செருக்கும் உடைய சில பெண்கள், பொது இடங்களில் ஆண்களோடு சீட்டு விளையாடிக் கொண்டு, பெண்களுக்குரிய அழகை இழந்து தாய்மைப் பண்பையும், பெண் தர்மத்தையும் கைவிட்டு தங்கள் உண்மையான இன்பத்துக்கும், உயர்வுக்கும், பெருமைக்கும் உதவாத சில உரிமைகளைப்பெற விரும்புகிறார்கள். அவர்கள் அழிவை அடைவது உறுதி.

மணவாழ்க்கையின் இலட்சியம் :

பழங்காலத்து முனிவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள். ஆனால் அவர்கள் காமவெறி நிறைந்த வாழ்க்கையை நடத்தவில்லை. அவர்களுடைய இல்லற வாழ்க்கை அறத்தோடு கூடியதாக இருந்தது. அவர்களைப் போலவே முற்றிலும் நடந்துகொள்ள முடியாவிட்டாலும் நீ எவ்வாறு வாழவேண்டும் என்பதற்காக அவர்களுடைய அடிச்சுவடுகளை முன் மாதிரியாக வைத்துக்கொண்டு, சத்தியத்தின் பாதையில் நடக்கவேண்டும். காம வேட்கையுடனும், மனம்போல் வாழ்வதும் இல்லற வாழ்க்கையல்ல. தியாகம், தொண்டு, அறம், தூய்மை, எளிமை, பண்பு, இரக்கம், சுயவுதவி மற்றும் நல்லன எல்லாமும், மக்கட் சமுதாயத்துக்குத் துணைபுரிவன எல்லாமும் நிறைந்த கண்டிப்பான வாழ்க்கைதான் இல்லறம். அந்த வாழ்க்கையை நடத்த முடியுமானால், இல்லறம் துறவறத்திற்கு இணையானது.

இல்வாழ்க்கை நல்ல முறையில் நடத்தப் பட்டால் அது முக்தி அல்லது விடுதலையை அடையத் தடையாக இருக்காது. நல்ல பெண்மணி தன் கணவனுக்கு ஓர் ஆற்றின் இரண்டு கரைகளைப் போன்றவள். அவள் செலுத்தும் அன்பு இறைவனுடைய அருளுக்குச் சமமானது.

திருமணத்தின் நோக்கம் மகனைப் பெற்றுக் கொள்வதற்காக மட்டுமே என்று எண்ணி ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. அதனால் உடல் நலமும் மன நலமும் கெட்டுவிடும். உடலுறவில் அளவுக்கு மீறி ஈடுபட்டு ஆண்மையை வீண் செய்வதைத் தடுக்க வேண்டும்.

இளம் பருவத் திருமணங்களும் மக்கட்தொகைப் பெருக்கமும்:

இளம் பருவத் திருமணங்கள் சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும். வங்காளத்திலும், சென்னை மாகாணத்திலும் இளம் கைம் பெண்கள் அதிகமாக இருக்கின்றனர். இந்த உலகைப்பற்றியும், வாழ்க்கையைப்பற்றியும் ஒன்றுமே அறியாத சிறுவர்கள், எட்டு அல்லது பத்து வயதுள்ளவர்களாக இருக்கும் போதே திருமணம் செய்விக்கப்படுகிறார்கள். குழந்தைகளுக்கு குழந்தைகள் பிறப்பதைக் காண்கிறோம். குழந்தைகளான தாய்மார்களைப் பார்க்கிறோம். பதினெட்டே வயதுள்ள ஒரு சிறுவனுக்கு மூன்று குழந்தைகள் இருக்கின்றார்கள். எவ்வளவு பரிதாபமான நிலை! உடலளவிலும் மனத்தளவிலும் எத்தகைய சீர்கேடு. நீடித்த வாழ்நாள் இல்லை. மக்கள் விரைவில் இறந்து படுகிறார்கள். அடிக்கடி மகப்பேறு ஏற்படுவதால், கணக்கற்ற நோய்கள் ஏற்பட்டு பெண்கள் உடல் நலம் கெடுகிறது.

மாதம் ஒன்றுக்கு ஐம்பது ரூபாய் ஊதியம் பெறும் அலுவலருக்கு முப்பது வயதிற்குள் ஆறு குழந்தைகள் இருக்கின்றன. இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை அவன் குடும்பம் விரிவடைகிறது. ''இவ்வளவு பெரிய குடும்பத்தை எப்படிக் காப்பாற்றுவது? என் மக்கள் கல்வி கற்க நான் ஏவ்வாறு உதவுவது. என் பெண் குழந்தைகளுக்குத் திருமணம் நடத்த என்ன செய்வது?'' என்றெல்லாம் அவன் சிந்திப்பதில்லை. உடலுறவில் ஏற்படும் கணநேர வெறியால், இந்த இழிவான தவறையே மீண்டும் மீண்டும் செய்கிறான். தன்னடக்கம் என்பது அவனிடம் சிறிதளவுகூட இல்லை. காமவெறிக்கு முற்றிலும் அடிமையாகி

விடுகிறுன். முயல்கள் குட்டி போடுவதைப்போல், கணக்கில்லாமல் குழந்தைகளைப் பெற்று, உலகில் பிச்சைக்காரர்களின் எண்ணிக்கையைப் பெருக்கு கிறுன். விலங்குகளுக்குக்கூடத் தன்னடக்கம் இருக்கிறது. சிங்கங்கள்கூட வருடத்திற்கு ஒரு முறைதான் தங்கள் துணையை நாடிச் செல் கின்றன. அறிவுள்ளவன் என்று கூறிக்கொள்ளும் மனிதன்தான் உடல் நலத்துக்கான விதிகளை மீறி இந்த வகையில் கண்டிக்கத்தக்க தவறு செய்கிறுன். இயற்கையின் விதிகளை மீறியதற்கான தண்டனையை அவன் வெகு விரைவில் அனுபவிக்கப் போகிறுன்.

உலகிலுள்ள மக்களின் எண்ணிக்கை மிக வேகமாக அதிகரித்துக்கொண்டே போகிறது. மக்கள் பலவிதமான மருந்துகளையும் தடுப்பு முறை களையும் கையாண்டு மக்கட் பெருக்கத்தை தடுக்க முயலுகின்ருர்கள். இது முட்டாள்தனமானது. ஏனென்ருல் இதில் எவருக்கும் இதுவரை வெற்றி கிட்டவில்லை. மிகச்சிறிய விந்தணு ஒன்று மிகவும் வேகமாகச் செயலாற்றக்கூடிய திறனுள்ளது. அதைத்தவிர இதனுல் ஆற்றல்மிக்க விந்து வீணுக்கப் படுகிறது. இந்த ஆற்றலை பிரம்மசரியத்தைப் பயில்வதன் மூலம் திறமைமிக்க 'ஓஜஸ்' என்னும் ஆற்றலாக மாற்றலாம். பயனற்ற கருத்தடைக் கருவிகளை வாங்குவதில் மக்கள் நிறைய பணத்தை வீணுக்குகிருர்கள். உலக முழுவதுமே பாலுணர்வு என்னும் போதையில் மயங்கி இருக்கிறது. கல்வியறிவு படைத்தவர்கள் எனப்படுபவர்கள்கூட இதற்கு விதிவிலக்கல்ல. தவருன எண்ணங்களில் மனம் திரிந்து மயங்கி உலகில் இயங்குகிருர்கள். மனித இனத்தின் விந்தையான படைப்புகள்! இந்த பரிதாபத்துக்குரியவர்களை கடவுள் இந்தச் சேற்றிலிருந்து மீட்டு, ஆன்மீக உலகத்தைக் காணுமாறு அவர்கள் கண்களைத் திறக்கட்டும்.

தன்னடக்கம், பிரம்மசரியம் ஆகிய இரண்டும்தான் கருத்தடைக்கான பயனுள்ள வழிகளாகும்.

திருமணம் — வாழ்க்கை முழுவதுக்குமான பந்தம்:

இல்லறவாசியின் வாழ்க்கையை நடத்துவது மிகவும் கடினமானது தன்னுடைய ஆசைகளை அடக்கமுடியாத ஒருவனுக்கு இல்லற வாழ்வு விதிக்கப்பட்டுள்ளது ஆசைகளற்ற ஒருவன் நிவ்ருத்தி மார்க்கத்துக்குத் திரும்பி விடலாம்.

மனைவி என்பவள் ஆடம்பர வாழ்க்கைக் குரியவள். ஒரு இன்றியமையாத தேவையல்ல. ஒவ்வொரு இல்லறவாசியும் திருமணத்துக்கு பிறகு கண்ணீர் விட்டழுகிறான். ''என் மகன் டைபாய்டு காய்ச்சலால் வருந்துகிறான். என் இரண்டாவது மகளுக்குத் திருமணம் நடக்கவேண்டும். எனக்கு நிறைய கடன் இருக்கிறது. என் மனைவி தனக்குத் தங்கச் சங்கிலி வேண்டுமென்று தொல்லை செய்கிறாள். என் மூத்த மருமகன் சமீபத்தில்தான் இறந்து போனார்'' என்று சொல்லி அவன் புலம்புகிறான்.

திருமணம் என்பது ஒரு சாபம் போன்றது. அது வாழ்நாள் முழுவதற்குமான சிறை போன்றது. அது ஒரு பெரிய தளை. சுதந்திரமாக இருந்த பிரம்மச்சாரி திருமணமாகிய நுகத்தடியில் கட்டுண்டு, கைகளும், கால்களும் சங்கிலியால் பிணைக்கப்பட்டவன் போலாகின்றான். சாதாரணமாக எல்லா இல்லறவாசிகளின் நிலையும் இதுதான். திருமணத்துக்குப் பின் அவர்கள் கண்ணீர் விட்டழுகிறார்கள்.

திருமணமான இல்லங்களில் பொதுவாகக் காணும் காட்சிகள் :

ஒருவரையொருவர் சரிவர புரிந்து கொள்ளாததாலும், மன வேற்றுமைகள் காரணமாகவும், கணவன் மனைவி ஆகிய இருவருக்கிடையிலும் ஒவ்வொரு நாளும் சச்சரவுகள் ஏற்படுகின்றன. கணவன் தனக்கு அடங்கி, தன்னுடைய விருப்பங்களைத் தவறாமல் நிறைவேற்ற வேண்டும் என்று மனைவி நினைக்கிறாள். மனைவி தனக்கு அடங்கி நடந்து, தன் விருப்பங்களை நிறைவேற்ற வேண்டுமென்று கணவன் நினைக்கிறான். இது நடக்கக்கூடிய செயலா? இல்லை. ஒவ்வொரு கணமும் சச்சரவுதான். எல்லா சமயங்களிலும் கைகலப்பு ஏற்படாவிட்டாலும் அவர்கள் மணிக்கணக்காக ஒருவரோடொருவர் பேசிக்கொள்வதில்லை. கணவன் தன்னடக்கமில்லாமல் முன்கோபமுள்ளவனாக இருந்தால், சில சமயங்களில் அடியும், உதையும் இருக்கும். மனைவி, சாக்ரடீசின் மனைவியைப் போன்றும், ஜீஜாபாயைப்போலும் இருந்தால், இது மாறி நடக்கும்; இடி இடித்து கணவன் தலையில் மழையும் பெய்யும். சில சமயங்களில் மனைவி கோபத்துடன், உணவு சமைக்க மறுத்துவிட்டு, தலைமுதல் கால்வரை போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு பொறுக்க முடியாத வயிற்று வலியால் அவதிப்படுவதுபோல் நடிப்பாள். அப்பாவியான கணவன் ஏதாவது உணவு விடுதியில், சாப்பிட்டுவிட்டு அலுவலகத்துக்குச் செல்வான். சில சமயங்களில் மனைவி, கணவனிடம் சொல்லாமல் தன் தாயார் வீட்டுக்குப் போய்விடுவாள். வெட்கம் கெட்ட துணிவற்ற அப்பாவியான கணவன், அவளைக் கெஞ்சிக் கூத்தாடித் திரும்ப அழைத்து வருவதற்காக மாமியார் வீட்டுக்குப் போகிறான்.

ஆயினும், இல்லற வாழ்க்கை, பிரம்மச்சரிய வாழ்க்கை ஆகிய இரண்டில் எது சிறந்தது என்று ஒருவனைக் கேட்டால் இல்லற வாழ்க்கையே பிரம்மச்சரிய வாழ்க்கையைவிட ஆயிரம் மடங்கு சிறந்தது என்று அவன் சொல்வது உறுதி. தன்னுடைய முன்னுக்குப்பின் முரணான வாதப் பிரதிவாதங்களால் தன்னுடைய கொள்கையை நிரூபிக்கத் தீவிரமாக முயற்சி செய்வான்.

மக்களுக்குப் பிரித்தறியும் தன்மையோ, ஒரு தலைப்பட்சமற்ற மனப்பான்மையோ, நுண்ணிய அறிவோ கிடையாது. எனவே அவர்களால் உண்மையான நிலையை அறிய முடியவில்லை. அவர்கள் அறிவு தெளிவற்றும், திரிந்தும், குழப்பத் துடன் கலங்கியும், மயக்கத்துடனும், ஆசைகள் நிறைந்தும், மயக்கத்தில் ஆழ்ந்தும், கவர்ச்சிகளால் கவரப்பட்டும், அறியாமையால் மூடப்பட்டும் விளங்குகிறது. அவர்கள் என்ன செய்கிறோம் என்பதையே அறிவதில்லை.

ஆசையால் உந்தப்படும்போது, கணவன், மனைவியர் சற்று முன்னர் தங்களுக்கிடையே ஏற் பட்ட சண்டைச் சச்சரவுகளை மறந்துவிடுகிறார்கள். தங்கள் வாழ்க்கை மிகவும் பேறு பெற்றது என்று எண்ணுகிறார்கள். அவர்களுக்கிடையே உண்மை யான ஒற்றுமையும் மனத்தின் ஆழத்தில் அன்பும் இல்லாவிட்டாலும், அப்போதைக்கு கனிவான வார்த்தைகளை அன்பு ததும்பப் பேசிக்கொள் கிறார்கள்.

### இல்லத்தில் சமயம் :

வீட்டில் மனைவியின் நடவடிக்கை பிடிக்காத காரணத்தாலும், அவர்களால் யோகப் பயிற்சிக்குத்

தடை ஏற்படுவதாலும், சிலர் துறவறத்தை மேற்கொள்ளுகிறார்கள். அவர்களுடைய மனைவிமார் யோகப் பயிற்சிகளை மேற்கொண்டு தொடர அனுமதித்திருந்தாலும் அல்லது உதவியிருந்தாலும் அவர்கள் இல்லறத்திலேயே தொடர்ந்து இருந்திருப்பார்கள். தங்கள் கணவன்மார் வீட்டில் மத சம்பந்தமான வாழ்க்கையை மேற்கொள்வதற்குத் தங்கள் ஒத்துழைப்பை நல்குவது அறிவுள்ள பெண்களின் கடமையாகும். அப்போதுதான் வீட்டில் கணவனும் மனைவியும் அமைதியும் இன்பமும் நிறைந்த வாழ்க்கையை நடத்த முடியும்.

கணவனும் மனைவியின் மத சம்பந்தமான நடவடிக்கைகளில் தலையிடக் கூடாது. அவளுடைய ஆன்மீக முன்னேற்றத்துக்கும் தூய்மையான வாழ்க்கைக்கும் எல்லா வகைகளிலும் கணவன் உதவ வேண்டும். தன் மனைவிக்கு மத சம்பந்தமான நெறியில் பயிற்சி அளிக்க வேண்டியது கணவனின் கடமையாகும். அவள் ஜெபமும், கீர்த்தனையும் செய்ய வேண்டும். இராமாயணம், பாகவதம், மகாபாரதம் போன்ற மத சம்பந்தமான நூல்களைப் படிக்க வேண்டும். சில நாட்களுக்கொருமுறை உண்ணா நோன்பு இருக்க வேண்டும். அவளைக் கணவன் யாத்திரைத் தலங்களுக்கும் மகாத்மாக்களால் நடத்தப்படும் மத சம்பந்தமான விரிவுரைகளுக்கும் அழைத்துச் செல்லவேண்டும். அப்பொழுது வீடு மகிழ்ச்சி நிரம்பிய இடமாக இருக்கும். "மதத்தின் தொடர்பில்லாத ஒரு வீடு மாளிகையாக இருந்தபோதிலும் சுடுகாடு போன்றது," என்று மறை நூல்கள் கூறுகின்றன.

இராமா! உன் மனைவியைத் தேவியைப் போன்று நடத்து. அவள் வீட்டின் அரசி அல்லது இலக்குமி போன்றவள். பெண்களை மதிக்குமிடங்

களில் எல்லாம் செல்வமும், செழிப்பும், வெற்றியும், அமைதியும் பெருகும். லீலா! பதிவிரதையாக இரு. உன் கணவனுடன் சச்சரவிடாதே. சாவித்திரி, அனுசூயை, சீதை ஆகியவர்களைப் போன்றிரு.

தூய்மையுடனும், பக்தியுடனும் வாழ்ந்து, இந்த வாழ்க்கையிலேயே மிகச் சிறந்த பேரின்பத்தை அடைவீர்களாக. உணர்வு, மனம், ஆன்மீகம் ஆகியவைகளைப் பொருத்த அளவில் கணவன், மனைவி ஆகிய இருவருக்கிடையே ஒற்றுமை ஏற்படட்டும். மத சம்பந்தமானவையும் யோகப் பயிற்சிகளுமான நடவடிக்கைகளில் கணவன், மனைவி ஆகியவர்கள் ஒருவருக்கொருவர் உதவியாய் இருங்கள். இறையுணர்வு பெறுதலே உங்கள் நோக்கமாக இருக்கட்டும். தூய்மை என்பதே உங்கள் குறிக்கோளாக இருக்கட்டும். அறம் உங்களுக்கு வழிகாட்டட்டும்.

---

## ஒழுக்க நெறி

ஒழுக்கநெறி என்பது சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி மாறக்கூடியது. சரி அல்லது தப்பு, தர்மம் அல்லது அதர்மம் என்பவை சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி மாறக்கூடியவை. இந்தச் சொற்களை சரிவர விளக்குவது கடினம். ஒரு சமயத்தில் நல்லதாகக் காணப்படும் ஒன்று மற்றொரு சமயத்தில் அவ்வாறு இருக்காது. ஒழுக்கநெறி என்பது ஒவ்வொரு மனிதனையும் அவனுடைய சூழ்நிலைகளையும் பொறுத்தது.

ஒழுக்கம் என்பதன் பொருள் அடிக்கடி சூழ்நிலைக்கேற்ப மாறக்கூடியது. தன்னுடைய காம இச்சையைத் தணித்துக் கொள்வதற்காகத்தான் சட்டப்படி மணந்த மனைவியைக்கூடத் தொந்திரவு செய்யும் ஒருவன் ஆறு மாதங்களுக்கு ஒருமுறை வேசியின் வீட்டுக்குச் செல்பவனைவிட மோசமானவன். இடைவிடாது ஒழுக்க குறைவான எண்ணங்களில் மூழ்கி இருப்பவனே மிகவும் ஒழுக்கங்கெட்ட மனிதன் என்று சொல்லவேண்டும். இப்பொழுது அந்த நுண்ணிய வேறுபாடு தெரிகிறதா? ஓர் அரசன் தன் எதிரியைக் கொல்வது சரியானது. அபாயத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்காகக் கூட ஓர் அந்தணனும், துறவியும் எவரையும் கொல்லக்கூடாது. பொறுத்துக்கொள்ளும் தன்மையும் மன்னிக்கும் தன்மையும் அவர்களுக்கு இருக்கவேண்டும். அநீதியுடன் செயல்படும் ஓர் அரசு அலுவலரின் குற்றச்சாட்டிலிருந்து தன் குரு அல்லது ஒரு மகாத்மாவைக் காப்பாற்றுவதற்காக ஒருவன் பொய் சொல்லலாம். இந்த நேரத்தில் பொய்மையும் வாய்மையாகிறது. பலருக்குத் தீங்கு விளைவிக்கும் வாய்மைகூட பொய்மைக்கு நிகரானது. வழிப்போக்கர்களை நாள்

தோறும் கொல்லும் கொள்ளைக்காரனைக் கொல்வது அஹிம்சை எனப்படும். சில சூழ்நிலைகளில் ஹிம்சையும் அஹிம்சையாகிறது.

நிவ்ருத்தி அல்லது துறவு வழியில் வாழும் துறவி ஒருவருக்குப் பொருத்தமானது ''க்ஷமம்'' என்னும் ''மன்னிக்கும்'' பண்பாகும். அது அரசாள்பவருக்குப் பொருந்தாது ஆள்பவர் தனக்குத் துன்பம் செய்யும் ஒருவரை மன்னித்து விடலாம். ஆனால் பொது மக்களுக்குத் துன்பம் செய்யும் ஒருவரை அவரால் மன்னிக்க முடியாது.

தர்ம சங்கடம் :

சில சமயங்களில் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் எதைச்செய்வது என்று திகைப்படைய நேரிடுகிறது. அந்தச் சமயங்களில் அறத்திற்கு மாறான செயல் எதுவோ அதைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்போது குறைந்த அளவு தீங்கு பயக்கக் கூடியதைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அதனால் ஏற்படும் கர்மவினைப்பயனை ஏற்றுக் கொள்ளத் தயாராகவும் இருக்கவேண்டும். சாகப்போகும் நிலையில் உள்ள தந்தைக்கு உணவு தேவை. வீட்டில் உணவு இல்லை. உணவு இல்லாவிட்டால் தந்தை பட்டினியால் இறந்துவிடுவார். உணவை திருடித்தான் அடைய வேண்டும். இந்தச் சமயத்தில் மகனுடைய கடமை என்ன? தன் தந்தையின் உயிரைக் காப்பதுதான் மகனின் கடமை. அவன் உணவைத் திருடி வந்து தன் தகப்பனுடைய உயிரைக் காப்பாற்றுகிறான். ஆனால் திருடிய குற்றத்துக்காகத் தக்க தண்டனையை அவன் ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

நோக்கம் தான் முக்கியமானது :

ஒரு செயலைச் செய்வதன் நோக்கத்தைத்தான் கவனிக்க வேண்டும். செய்வதால் ஏற்படும்

செயலின் விளைவு ஒன்றையே கவனித்து, அந்தச் செயல் சரியானது அல்லது தவறானது என்ற முடிவுக்கு வரக்கூடாது. செயல் புரிபவனின் அடிப்படை நோக்கம்தான் செயலின் தன்மையைத் தீர்மானிக்கும். இறைவன் செயல் புரிபவனின் நோக்கம் என்ன என்றுதான் காண்கிறார்.

இராமபிரான் இராவணனுடன் போரிட்டார். இராவணனும் இராமபிரானுடன் போரிட்டான். செயல் ஒன்றாக இருந்தாலும் இருவருடைய நோக்கங்களும் வேறுபட்டிருந்தன.

அறத்தை நிலைநாட்டவும், கொடியவனான இராவணனுடைய தீயச்செயல்களிலிருந்து மக்களைக் காப்பாற்றுவதற்காகவும் இராமபிரான் போர் செய்தார். தன்னலமுள்ள நோக்கம் அவரிடம் ஏதுவுமில்லை. ஆனால் இராவணனுடைய நோக்கம் கொடியது.

ஒரு கர்மயோகி உலகியல் மனிதனைவிடத் தீவிரமாகவும், உற்சாகத்துடனும் சமுதாயத்திற்கு உழைக்கிறான். இருவருடைய செயல்களும் ஒன்றேயானாலும், நோக்கங்கள் வேறுபட்டவையாக இருக்கின்றன. வாழ்க்கையின் முடிந்த முடிவை அடைய கர்மயோகி தொண்டு செய்வதன் மூலம் முன்னேற்றம் அடைகிறான். ஆனால் உலகியல் மனிதனோ தன்னலங்கருதி தூய்மையற்ற நோக்கத்துடன் செயல் புரிந்து சிக்கல்களில் தவிக்கிறான்.

ஒரு மனிதனுக்குள்ளே உள்ளத்தில் இருக்கும் நோக்கங்கள்தாம் அவன் செயல்களுக்கான விதைகளாகவும், வேர்களாகவும் இருக்கின்றன. அவனுடைய நோக்கங்கள் தூயவையாக இருக்குமானால், பின்னால் ஏற்படும் விளைவுகள் அனைத்தும்

தூயவையாகவும், நல்லவையாகவும் இருக்கும். இல்லாவிடில் தீங்கும் துயரமும்தான் உண்டாகும்.

உன்னுடைய நோக்கத்தைத் தூயதாக வைத்துக் கொள்ள வேண்டும். உனக்குள்ளே இருக்கும் தீர்மானம் அல்லது மனோபாவம் நீ செயல் படும்போது கர்வம், தற்பெருமை ஆகியவை களின்றும் நீங்கி இருக்க வேண்டும். அப்போதுதான் உன் நோக்கத்தில் தூய்மை இருக்கும்.

நியாயமான அல்லது தூயதான கொள்கை களுக்காக தன்னை அர்ப்பணித்துக் கொள்வதால் தான் ஒழுக்கத்துடன் கூடிய வாழ்க்கையைத் தொடங்க முடியும். சரியான நல்லொழுக்கத்தை உடையவன் சரியான கொள்கைகள் உடையவனாக இருப்பான். அவன் அவைகளை தவறாமல் கடைப் பிடிப்பான் தன் குற்றம் குறைகளைக் களைந்து விடுவான். நற்பண்புகளை வளர்த்துக் கொண்டு நல்லொழுக்கத்தில் சிறந்தவனாக விளங்குவான்! முதலிலேயே சரியான கொள்கைகளை உடையவனாக இருந்தால், அறச் செயல்களைச் செய்யத் தவற மாட்டாய்.

அறச்செயல்களை நடைமுறையில் கடைபிடித்தல்:

அறச்செயல்களை நடைமுறையில் தவறாமல் செய்வதால் நம்மிடம் அறமாகிய பண்பு நிலைத் திருக்கும். செயல் முறையில் பயின்று, தீவிரமாகக் கடைபிடிப்பதால்தான் அறமாகிய நற்பண்பு நம்மிடம் நீடித்திருக்கும். அன்றாட வாழ்க்கையில் தன்னல மறுப்பு, தன்னலத் தியாகம் ஆகியவற்றை கடைபிடித்து நம் மனத்திற்கும் உள்ளத்திற்கும் பயிற்சி அளித்து, அவற்றைக் கட்டுப்படுத்தி வைக்க வேண்டும்.

உன் எண்ணம், சொல் செயல் ஆகிய மூன்றிலும் உண்மையுடனும், (உள் நோக்கத்திலும், ஒழுக்கத்திலும்) தூய்மையுடனும் இரு. மற்ற மனிதர்களைப்பற்றிய எண்ணங்களிலும், மற்றவர்களோடு பழகும்போதும் அன்புடனும், பொறுத்துக்கொள்ளும் தன்மையுடனும் இரு.

வாழ்க்கையின் அனைத்துச் செயல்களிலும், ஒருவன் இந்தப் பண்புகளுடன் இருக்கவும், அவற்றை நடைமுறையில் காட்டவும் தீவிரமாக முயலவேண்டும். பெற்றோர்களும் மக்களும், முதியவர்களும் இளையவர்களும், ஆசிரியர்களும் மாணவர்களும், தோழர்களும் தங்களுக்கு இடையிலும் குரு சீடர்களுக்கிடையேயும், ஆட்சியாளர் மக்களுக்கு இடையிலும் பல நாட்டுமக்களுக்கிடையிலும் இந்த உயரிய குறிக்கோள் இருக்க வேண்டும்.

மனிதனின் உலகியல், சமுதாய மற்ற கடமைகள் அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை. ஒரு மனிதனின் முடிவானதும் முக்கியமானதுமான கடமை, சத்தியம் அல்லது இறைவுணர்வை அடைவதுதான். மனிதன் மற்றெல்லா கடமைகளைச் செய்வதும் இந்த முக்கியமானதும் மிகவுயர்ந்ததுமான கடமையைச் செய்யும் தகுதியைப் பெறுவதற்குத்தான்.

ஒழுக்க நெறிகள் அனைத்தும் ஆன்மீக ஞானத்தைப் பெறுவதையே இலட்சியமாகக் கொண்டுள்ளன. ஒழுக்க நெறியால் மனிதனின் கீழ்த்தரமான அல்லது தாழ்ந்த இயல்பு அடக்கப் பட்டு, மனம் அமைதியை அடைய வழி ஏற்படுகிறது. மன அமைதி ஏற்பட்டால் பகுத்தறியும் அறிவு தோன்றுவதால், விரைவில் ஆன்மீக ஞானம் உதயமாகிறது.

